ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# சக்கரவர்த்தித் திருமகன் சரித மாலை.

இது
ஸர்வமங்கள விகாரிஆண்டு வைகாசித்திங்கள்
நாலேழாம் நன்னாள் (11-6-1959) குருவாரம்
ஆயில்ய நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில்
இராமநாதபுரம் சமஸ்தானம் தேவஸ்தானம்
சமய சொற்பொழிவு கம்பராமாயணப் பிரசங்கம்
இராமநாதபுரம் ஸ்ரீசொக்கநாத ஸ்வாமி கோயிலில்
ஸ்ரீஅஹோபிலமடம் ஆஸ்தாந தமிழ் வித்வானும்,
திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்கம், அம்பத்தூர்
அறநெறி அரங்கம் இவற்றின் காரியதரிசியுமாகிய
பந்தல்குடி பாரத்வாஜ மாட பூசி

ரெ. திருமலை அய்யங்கார் அவர்களால்
(Senior Superintendent, FA & CAO's Office,
Southern Ry., Madras, Retired.)

25-5-59 முதல் நடைபெற்று வந்ததில்
ஸ்ரீராம பட்டாபிஷேகத்தன்று
வழங்கப்பெற்ற

## சந்தமிகு செந்தமிழ்ப் பாமாலை.

அரங்கக் காரியாலயம்:
"ஸ்ரீரங்க விலாஸம்,"
ஸ்ரீமௌநசுவாமிகள் மடத்துத்தெரு, அம்பத்தூர்.

11—6—1959

ஸ்ரீ:

# முகவுரை.

பாதவண் டூளியிற் பவங்க ளோவிநற்
கோதமன் மனைவிமுன் னுருக்கொண் டேகவே
தீதகல் சனகர்கோன் பயந்த சீதையா
மாதினை மணந்தமா யவனை வாழ்த்துவாம்.

—[ஸ்ரீமஹாபாகவத புராணம் 102-ஆவது
நிருகராஜன் மோட்சப் படலம்.]

திருமாமகள் கேள்வன் உலகில் உள்ள உயிர்கள் எல் ம் நல்வழி தீவழிகளை நன்ருகப் பகுத்து உணர்ந்து நடக்கும் ற்றை அறிவித்தற்பொருட்டு. தன் கட்டளை ரூபமாக வேதத் வெளியிட்டு அருளினுன். அவ்வேதம், அரசன் கட்டளையிடு போல், 'ஸத்யம்வத, தர்மம்சர' என்று கட்டளையிட்டு, அக் டளைக்குஉட்பட்டு நடப்பார்க்கு நன்மையும் நடவாதவர்க்குத் மையும் விளைத்தலாற் ப்ரபுஸம்மிதம் எனப்பெறும்.

அந்த வேதத்தின் பொருளை அறிதற்குக் கருவியாக ஆறு கங்கள் ஏற்பட்டன; அவை-சிக்ஷை வியாகரணம், சந்தஸ், க்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்பவையாம். இவையேயன்றி தங்களின் பொருளை அறிய மீமாம்சை, நியாயம், புராணம், ம சாஸ்திரம் (ஸ்மிருதி) என்று வேறு சாஸ்திரங்களும்உண்டு வ-வேதத்தின் உபாங்கங்கள் எனப்பெறும்.

அவற்றுள் புராணத்திஞல், சிருஷ்டி சங்காரங்களின் மங்களும் மனுவந்தரங்களின் கிரமங்களும், வம்சங்களும், ந்திரங்களும் அறிவிக்கப்பெறுகின்றன. இதிஹாஸங்களும் ணங்களோடு சேர்ந்தவையே. உபதேச பரம்பரையில் த பழைய சரித்திரம் ஒன்றைப் பிரதானமாக எடுத்துப் பல க்கதைகளோடு புணர்த்தி விரித்துக்கூறும் நூல் இதிகாசம் றும், பழைய பல வரலாறுகளை லோகசிருஷ்டி முதலிய விவ துடன் விரவிக் கூறும் நூல் புராணம் என்றும் வேறுபடும். வ-வேதத்தின் கருத்து இன்னது என்று நியாயப்பிரமாணங் ால் தேற்றி விளக்குதல்பற்றி, வேதத்திற்கு உபப்ரும்ஹ ங்கள் என்று கூறப்பெறும். (உபப்ரும்ஹணம்-வளர்ப்பது). ணங்கள், முன்னையோரின் சரிதங்களைச் சொல்லுமிடத்து, சொற்களால் நல்வழியிற் செலுத்தும் நண்பன்போல அவர் ன் நன்னடத்தையைப் புகழ்ந்தும் தீயொழுக்கங்களை இகழ்ந் கூறி நல்வினை தீவினைகளில் விருப்பு வெறுப்புக்களைப் படிப் ர்க்கு உண்டாக்குவதால் ஸுஹ்ருத்ஸம்மிதம் எனப்பெறும்.

புராணம், கிருதயுகத்தில் பிரமனுல் நூறுகோடிக்கிரந்த வாய் வெளியிடப்பெற்று ஒன்றேயாயிருந்தது. பின்பு திரே கத்திலே அதனை ருஷிகள் நூற்றுப்பதினெரு ஸம்ஹிதைக ிடு கூடின பதினெட்டுப் பிரிவுள்ளதாய்க் கோடிக் கிரந்த ச் சுருக்கினுர்கள்.

புராணங்கள் பதினெட்டாவன — ப்ரஹ்மம், பாத்மம், வைஷ்ணவம், சைவம், பாகவதம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்நேயம், பவிஷ்யத், ப்ரஹ்மகைவர்த்தம், லிங்கம், வாராஹம், ஸ்காந்தம், வாமநம், கௌர்மம், மாத்ஸயம், காருடம், ப்ரஹ்மாண்டம் என்பவையாம். இவற்றுள், பாகவதம்பதினெண்ணாயிரம் கிரந்தம் உடையது. (கிரந்தம்-மெய்யெழுத்தொழிய உயிரும் உயிர்மெய்யும் ஆகிய முப்பத்திரண்டு எழுத்தாம்.)

இப்பதினென் புராணங்களுள் பாகவதம், பாத்மம், வாராகம், வைஷ்ணவம், காருடம், நாரதீயம் ஆறும் ஸாத்விக புராணங்களாம்.

ஸாத்விக புராணங்களில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவினுடைய மகிமை உரைக்கப்பெறும் காததல் தொழில் சத்துவகுணத்தின் காரியமாதலால், அத்தொழிற்கு உரிய கடவுளான விஷ்ணுவை சாத்துவ குணத்திற்கு உரியவன் என்று நூல்கள் கூறும்.

ஸாத்விக புராணங்கள், தம்மைப் படிப்பவர்கட்கு பிறவித் துன்பங்கள் பலவற்றையும் வேரற ஒழித்துப் பரமபதம் அருளும் பேராற்றல் உடையன ஆதலால் மிகச் சிறந்தன.

புராணத்தின் இலக்கணங்கள்-சர்க்கம், விசர்க்கம், விருத்தி, ரக்ஷை, மந்வந்த்ரம், வம்சம், வம்சாநுசரிதம், ஸம்ஸ்தை, ஹேது, ஆச்ரயம் எனப்பத்தாம். சிருஷ்டி, சங்காரம், வம்சங்கள், மந்வந்தரங்கள், வம்சங்களின் சரித்திரம்என்னும் ஐந்தும் புராணத்தின் இலக்கணம் என்று சில இடங்களிற் சொல்லப்பெறும். இவற்றுட் பத்து லக்ஷணங்களையும் உடையது மகாபுராணம் என்றும், ஐந்து லக்ஷணங்களையுடையது அல்பபுராணம் என்றும் கூறுவர். பாகவதம், மகாபுராணங்களுள் ஒன்று. இது சிறந்த பிரமாணமாகப் பலராலும் அங்கீகரிக்கப்பெறுவது; பக்தியையும் வைராக்கியத்தையும் விளைப்பது.

பாகவதம் வடமொழியில் பத்தியங்களாலும் கத்தியகங்களாலும் தண்டகங்களாலும் நிறைந்த இருநூறு அத்தியாயங்களாகப் பிரிந்த பன்னிரண்டு ஸ்கந்தங்களை உடையது. இதனைச் சொல்லியருளியவர், சுகமுனிவர்; கேட்டவர் பரீக்ஷித்து மகாராஜா.

மஹாபாகவதம் என்ற வடமொழி நூல் அறுநூறு அத்தியங்கள் கொண்ட முப்பத்தாறுயிரம் கிரந்தம் உள்ளது. அதனைக் கூறியவர், நாரத பகவான்; கேட்டவர், ருக்மிணிப் பிராட்டியார். அதனை ஏறக்குறைய நானூறு ஆண்டுகட்குமுன் நெல்வீகளர் அருளாளதாசர் என்னும் மதுரகவி வரதராஜையங்கார் ஏறக்குறைய ஒன்பதினாயிரம் பாடல்களாகத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்,

மேற்கூறிய பாகவதம் தமிழில் 155 அத்தியாயங்களாக ஏறக்குறைய 5000 பாடல்களால் மொழிபெயர்க்கப்பெற்றுள்ளது. இத்தமிழ்ப் பாகவதத்தை இயற்றியவர் நம் சேதுநாட்டு வேம்பத்தூரில் வாழ்ந்த அந்தணர் திலகமாகிய செவ்வைச் சூடுவார் என்பவர்.

இதனை,

கதிக்குமறு பிறப்பொழித்துக் கதிகொடுக்கும் பாகவத கதையை [முன்ன
மதிக்குமுயர் வடமொழியாற் புனைந்தருளவ் வியாதமுனி வரனே [மீா
வுதிக்குநிம்பை மாதவபண் டிதைச்செவ்வைச் சூடியென வுலகு [போற்ற
விதிக்குமறையவர்குலத்திற் றோன்றியருந் தமிழாலும் விளம்பி [னனே

—[சிறப்புப்பாயிரம்]

திருமருவ பஞ்சலக் கணவேலை பொங்கிச்
செழிக்குமிகு விதிகொழிக்குந்
தென்னிம்பை நகரமதில் வாழுமந் தணரிற்
சிறந்தசெவ் வைச்சூடுவார்
சுருதிபுகழ் பாகவத பௌராண மோதினர்
துலங்கும்வா சிட்டமதனைச்
சொல்லினா ராளவந் தார்மாத வப்பட்டர்
சொன்னதிரு விளையாடலும்
..............................
புகழ்சவுந் தரியலகரி
பெருமைமிகு கவிராச பண்டிதர் புகன்றனர்
பெருமாளையன்சொனா னெல்லையன் கோவைப்
பிரபந்தவகை புகழ்பெருகவே.

—[தனிச்செய்யுள்]

என்ற பாக்களால் அறியலாம்.

இச் செய்யுள்களில் 'நிம்பை' என்றது, வேம்பத்தூர்க்கு வழங்கிய மறுபெயர். (நிம்பம்—வேம்பு, வேப்பமரம்; வடசொல்.) இவ்வேம்பத்தூர் பாண்டி நன்னாட்டில் உள்ளது. இது, முன்குடுமி யுடையவரும் சோழியர் எனப்படுபவரும், அத்வைத சமயத்தவருமாகிய ஸ்மார்த்தப் பிராமணர்க்குக் குலசேகர பாண்டியனால் தானஞ்செய்யப்பெற்றதென்பர்.

தமிழ்ப் பாகவதநூலை இயற்றியவரது இயற்பெயர் மாதவ பண்டிதர். செவ்வையாகச் சூடும் பாமாலையையுடையவராதலால், இவர் 'செவ்வைச் சூடுவார்' எனக் காரணப் பெயர் பெற்றனர் என்ப. இவரது கவித்திறத்திற்கு, இப்பெயரேயன்றி, சிறந்த தமிழ் நடையையுடைய இந்த பாகவத நூலும்

ஏற்ற சான்றாகும். அன்றியும் முன்னர்க் காட்டிய தனிச் செய்யுளில் வேம்பத்தூர் வித்வான்கள் பலருள் இச் செவ்வைச் சூடுவாரை முதலாக வைத்துக் கூறியிருப்பதும், 'நிம்பை நகரமதில் வாழுமந்தணரிற் சிறந்த செவ்வைச் சூடுவார்' என்று அடைமொழி கொடுத்துக் கூறியதும், இவரது சிறப்பிற்கு அறிகுறியாம்.

இந்நூலின் ஒன்பதாங் கந்தம் (கந்தம்-பாகம்; ஸ்கந்தம் எனும் வடமொழியின் விகாரம்) பதினெட்டு அத்தியாயங்களை உடையது. அவற்றில் ஒன்பதாவது "சக்கரவர்த்தித் திருமகன் சரிதம் உரைத்த அத்தியாயம்." அதன் சொய்யுட்டொகை 137. ஸ்ரீமத்ராமாயணத்தில் உள்ள ஆறு காண்டங்களின் ஸங்க்ரஹமே அது. அக்கிரந்தம் 'சக்கரவர்த்தித் திருமகன் சரிதமாலை' என்ற திருநாமத்துடன் அம்பத்தூர் அறநெறி அரங்கம் என்ற ஸத்ஸங்க நற்சங்கத்தின் 79-ஆவது வெளியீடாகப் பிரசுரிக்கலாயிற்று.

"பாகவதம்" என்பதற்கு பகவானைக் குறித்துச்சொல்லும் நூல் என்று பொருள்; இது வடமொழித்தத்திதாந்த நாமம். பகவான் என்னுஞ் சொல்லுக்கு-நிறைந்த மகிமை, தைரியம், கீர்த்தி, சம்பத்து, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறையும் உடையவன் என்பது பொருள்: 'பகம்' என்று இந்த ஆறுக்கும் பெயர். இங்கு அடைமொழியில்லாத பகவானென்னுஞ்சொல் சிறப்பாய் அக் குணங்களையுடையார் பலரினும் உயர்ந்த திருமாலை உணர்த்திற்று.

காயத்ரியின் சொற்பொருள்களாலே தொடங்கிப் பகவத் ஸம்பந்தமான தருமங்களை விஸ்தாரமாக வர்ணித்து விருத்திராசுரவதம் முதலான சரித்திரங்களோடு ஸாரஸ்வத கல்பத்தின் வரலாறுகளை விளக்கிப் பதினெண்ணாயிரம் கிரந்தமாக ஸ்ரீவேத வியாச முனிவராலே செய்யப்பட்டது பாகவதம் என்றும், 'அதனைப் பாராட்டினவன் மறுமையிற் பரமபதமடைவான்' என்றும் மத்ஸ்ய புராணம் கூறுகின்றது; இன்னும் இந்நூலின் பயனை இதன் இறுதி அத்தியாயத்தில், "இன்ன நற்கதை கேட்டுந எழுதின ரிசைப்போர், பின்னல் வெண்டிரைப் பார்புகழ் பெருந்திரு வினராய், மன்னு கின்றவ ராகியும் வல்வினை மருவார், நன்ன லந்தரு மால்பரந் தாமநண் ணுவரால்' என்பது முதலியவற்றால் அறியலாம்.

மேற்குறித்த ஒன்பதாங் கந்தம் ஒன்பதாவது அத்தியாயம் சில ஏட்டுப் பிரதிகளில் "ஸ்ரீராம சரித்திரமாகிய ஸ்ரீமத் ராமாயணம் சங்கிரகமாக வுரைத்தது" என்று எழுதப்பெற்றிருக்கின்றது. இராமாயணத்தில் உள்ள முதல் ஆறு காண்டங்

களில் கூறியவரலாற்றை இந்த அத்தியாயத்தில் (அத்தியாயம்-நூற்கூறுபார்டு) காணலாம். சுகமுனிவர் பரீக்ஷித்து மகாராசனுக்குச் சூர்யவம்ச வரலாறு கூறி வருகையில், தசரதன் மகனாக இராமன் அவதரித்ததைக்கூற, அது கேட்ட அரசன் 'அப்பெருமான் சரித்திரத்தை உரைத்தருள்க' என்று வேண்ட, முனிவர் இராம சரிதம் உரைக்கலாயினர் என்பது கதாஸந்தர்ப்பம். இந்தச்சீரிய அத்தியாயத்தின் பயன் "சினத்தொடு மரக்கரைச் செகுத்த செஞ்சிலைக் கனத்தினிற் றிகழ்பவன் கதைகள் கேட்குநர், நினைத்தனர் வைகுவோர் நிகழ்த்தும் வண்மையோர், மனத்தினில் விழைந்தன மருவி வாழ்வரே." என்று கூறப்பெற்றுள்ளது.

25—5—59 திங்கட்கிழமை முதல் பிரதி தினம் இரவு 8-30 மணி முதல் 10-30 மணி வரை இராமநாதபுரம் ஸ்ரீ சொக்கநாத சுவாமி கோயிலில் இராமநாதபுரம் சமஸ்தானம் தேவஸ்தானம் சமயசொற்பொழிவு கம்பராமாயணப் பிரசங்கம். என்ற தலைப்பில் அவதாரிகை. தேவ சரணாகதி ஸ்ரீராமஜனனம், அகல்யாசாப விமோசனம், சீதா கல்யாணம், மந்திராலோசனை மந்தரை சூழ்ச்சி. குகப் பெருமாள் வைபவம் (1,2-6-59) ஸ்ரீ பாதுகாபட்டாபிஷேகம், விராதன் துதி, சீதாபஹரணம், ஜடாயுமோக்ஷம், வாலிவதம். சுக்ரீவ பட்டாபிஷேகம் விபீஷண சரணாகதி, (9,10-6-59) ஸ்ரீ ராமபட்டாபிஷேகம், என்ற விஷயங்கள் அடியேனால் ஈரொன்பது தினங்களில் உபந்யஸிக்கப்பெற்று வந்ததில் ஸ்ரீ ராமபட்டாபிஷேகத்தன்று இம்மாலை அரங்கேறி வழங்கப்பெற்றது ஒரு தனிச் சிறப்பு.

படைப்புக் காலந்தொட்டுச் சிறப்புற்றோங்கி வளர்ந்து வரும் பாண்டி நாட்டுச் சேது நாட்டு இராமநாதபுரம் சமஸ்தானத்தைச் சார்ந்ததே எங்கள் தர்மாசனம் பந்தல்குடி அக்கிரஹாரம். சேது மன்னர்களின் காவலிலேயே செழித்தோங்கி வரும் எங்கள் குடும்பம் தனிப் பெருமை பெற்றது. அடியேனுடைய திருத் தகப்பனார் ஸ்ரீமான் பாரத்வாஜ மாடபூசி ரெங்கய்யங்கார் அவர்களும், பெரிய தகப்பனார் ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸய்யங்கார் அவர்களும் (ஆறுறு ஆண்டுகள் இராமநாதபுரம் ராஜா உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராகவிருந்து ஒய்வு பெற்றுள்ள ஸ்ரீமான் P S நாராயணய்யங்கார் அவர்களின் திருத் தகப்பனார்) சேது சமஸ்தானத்தில் சுமார் ஐம்பது ஆண்டுகள் உயர்ந்த சேவகம் செய்து நன்னெறிநின்று ஒழுகி அந்தமில் பேரின்பத்து அடியரோடிருந்து அங்கு ஆட்செய்து கொண்டிருக்கின்றனர். அன்னவர்களது ஆசியை எப்போதும் பெற்று உய்ந்து வருகின்றேன் யான்.

சேதுநாட்டின் தலைநகரான இராமநாதபுரத்தை யான் என்றும் மறக்க இயலாது. எனது தந்தையாரின் தனி நண்பரும், நடையினின்று உயர்ந்த உத்தம குணச் செம்மலும், அடியேனுக்கு வீடும் விளக்கும் வைத்து உதவிய சொல்லின்

செல்வரும் ஆகிய ஸ்ரீமான் இராமநாதபுரம் காளிமுத்துப்பிள்ளை செல்லப்பெருமாள்பிள்ளை (Sri R. K. C. Pillai, Officer, Finance Department, Government of India) அவர்களும், அப்பொழுதைக்கப்பொழுது ஆவன செய்து ஊக்கம் அளித்து பேருதவி செய்த இராமநாதபுரம் சமஸ்தானம் வக்கீல் ஸ்ரீமான் ஆ. உக்கிரபாண்டியம் பிள்ளை அவர்களும் (சென்னை அட்வொகேட் ஸ்ரீமான் சோமசுந்தரம் பிள்ளை அவர்களின் நற்றந்தையும், Endowment Superintendent ஸ்ரீமான் M. இராமநாத பிள்ளை அவர்களின் மாமனும் ஆவர்) எங்கள் குடும்பத்துக்குச் செய்துள்ள மஹோபகாரத்துக்குத் தலையல்லாற் கைம்மாறிலேன். முப்பத்து நான்கு ஆண்டுகள் முறையாக உழைத்துத் தற்போது சென்னை தக்ஷிண ரெயில்வே ஸீனியர் சூப்பிரடெண்டொகப் பணியாற்றி ஓய்வு பெற்று நிற்பதற்கு முற்கூறிய முதல்வரே முன்னவர். வாழ்க அவர்கள் பந்துமித்திரர். வளர்க அவர்கள் தனிச் செல்வம்.

செந்தண்மை பூண்டொழுகும் ஸ்ரீமான் M. V. ராகவேந்திரராவ் அவர்கள் (Dewan and Administrative Secretary), அன்பும் அடக்கமும் அமைதியும் ஆபரணங்களாக விளங்கும் ஸ்ரீமான் P. S. லக்ஷ்மணராவ் அவர்கள் (Huzur Sheristedar சமஸ்தானம் தேவஸ்தானத்தைச் சார்ந்த அன்பர்கள். ஸ்ரீமான் A. ரெங்கசாமி அய்யங்கார் அவர்கள், (Advocate, Ramnad. அரங்க வெளியீடு 78) 1-6-59ல் வழங்கப்பெற்றதின் வள்ளலார் ஸ்ரீமான் S.N. சிவசுப்ரமணிய அய்யர் அவர்கள். (அட்வொகேட், இராமநாதபுரம்), எனது தந்தையாரின் ஆருயிர் நண்பரான சாளக்கிராமம் ஸ்ரீமான் துரைசாமி அய்யங்கார் அவர்களின் தவப் புதல்வரான ஸ்ரீமான் முத்துசாமி அய்யங்கார் அவர்கள் முதலிய மஹாஜனங்கள் சேதுபதி மஹாராஜா மஹாசமுகம், அவரது உற்றூர் உறவினர் அனைவர் இவர்கள் போன்ற பக்தர்கள் எல்லாரும் ஸ்ரீ ராமபிரான் திருவருள் பெற்று இன்புறுவாராக.

"நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு முண்டாம் வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கு, நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை, சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே" என்ற இராமாவதார நூற்பயனை இத்தனி மாலை வள்ளலார் ஸ்ரீமான் P. S. விச்வநாதன் அவர்கள் (மதுரை பாங்க், மதுரை) பூர்ணமாகப்பெறத்திருவருள் புரியுமாறு இறைவனை இறைஞ்சுகின்றேன்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

| | |
|---|---|
| 'ஸ்ரீரங்க விலாஸம்'<br>அம்பத்தூர்,<br>11—6—1959. | ப. ரெ. திருமலை அய்யங்கார்,<br>ஸ்ரீ அஹோபிலமடம் ஆஸ்தான<br>தமிழ் வித்வான்.<br>காரியதரிசி. |

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் பாகவத புராணம்.

## சக்கரவர்த்தித்திருமகன் சரிதமுரைத்த அத்தியாயம்.

என்றலும் பரமனுங் கெழுந்து வானவர்க்
கன்றருள் செய்தவா றரசு சொல்கென
ஒன்றிய மொழிசில வுரைக்கு மென்றுமெய்ந்
நன்றறி சுகமுனி நவிற்றன் மேயினன். (1)

மருக்கமழ் துளவணி மாயன் ருடொழா
அரக்கரை யமரர்க ளடர்த்து நீயெமைப்
புரக்கென மாதவன் புகன்ற வாறவர்
குரக்கெனு முருக்கொடு குலவி னாரரோ. (2)

தாவரு புகழுடைத் தயர தப்பெயர்க்
கோவெழிற் கோசலை குலவு கேகயன்
பாவைநற் சுமித்திரை யென்னும் பைந்தொடி
மூவரை மணந்தனன் முறையி னென்பவே. (3)

பூசலை வெரீஇய புலவர் வேண்டலால்
வீசலை யுறங்குவோன் விளம்பி ராமனென்
றூசலை நிகர்குழை யுலவும் வாள்விழிக்
கோசலை யளித்திடக் குலவி னனரோ. (4)

சாதனை யறிவனைத் தரும ரூபனை
வரதனை யிராகவன் மலர்நற் ருடொழும்
விரதனை விண்ணவர் விரிப்பி னேத்துறு
பரதனைக் கேகயர் பாவை பெற்றனள். (5)

நிலக்குவன் றுயர்க்கட னீக்கி யெண்டிசை
துலக்குவ னெனச்சொல்சத் துருக்கன் றன்னெடும்
இலக்குவன் றன்னையிங் கெழிற் சுமித்திரை
விலக்குவன் பகையென விருப்பி னீன்றனள். (6)

பால்வரு மூலையினர் பானின் றிப்புவி
மேல்வரு நாட்செயும் வினைக ளாகிமுன்
நூல்வரு கருமமு நோன்மை மைந்தர்கள்
நால்வரு மடைந்தனர் நன்கு வைகினர். (7)

அன்னவர் நால்வரி லடைந்த கோசிகன்
பின்னெழுந் திலக்குவன் மருவப் பேரருள்
துன்னிய விராகவன் றுணைவிற் போய்ப்பழி
மன்னிய தாடகை வதைசெய் தானன்றே. (8)

வருமுனி யருளொடு மகஞ்செய் சாலைவாய்ப்
பொருமிரு தாடகைப் புதல்வ ரைச்சினந்
தொருவனை யொருத்துமற் றொருவ னைக்கடல்
விரிதிரை கடத்தினான் வீரன் வாளியால். (9)

இகலறு கோசிக னினிதி னாற்றிய
மகமொரு குறைவற மகிழ்ந்து காத்தபின்
அகலிகை சாபமு மகற்றி யற்புதன்
மிகுவளம் விளங்கிய மிதிலை யெய்தினான். (10)

சாற்றிய முனியொடும் தம்பி தானொடும்
பாற்றிரை யுறங்கிய பரன் விதேகையாம்
மாற்றரு வளநகர் மன்ன னென்றுசொல்
ஆற்றல னெதிர்கொள வடைந்து வைகுநாள். (11)

நல்வளைச் சீதைதன் மணத்தி னாட்டிய
எல்வளைத் திடவெழு மெழில்கொண் மேருவாம்
கல்வளை தவன்சிலை யென்னுங் கட்டெழில்
வில்வளைத் ததிருற வெற்பின் வீழ்த்தினான். (12)

ஒதையை யண்டமின் றுடைந்த தோவெனக்
கோதையில் லிறுத்தநங் குரிசி லுக்கெழிற்
சீதையைக் கொடுத்தனன் றேவர் வாழ்த்தநற்
றாதையென் றுரைபெறு சனக னென்பவே. (13)

உடனுறை தருமிளை யோனு மோகையால்
கடிமணங் கேட்டவட் கலந்த தாதையோ
டடைதரு பரதனு மணிசெய் தம்பியும்
வடிவிழி மகளிரை மணமங் காற்றினர். (14)

வதுவைசெய் தணங்கொடு மகிழ்ந்து நாயகன்
மிதிலையிற் சில்பக லிருந்து பின்னொடும்
இதமுறு துணைவரு மெவருஞ் சூழ்வரக்
கதுமென வயோத்தியைக் கருதிப் போயினான். (15)

கல்லையுங் காரிகை யாக்குங் காலினன்
எல்லையி ருளையோ டேகு மவ்வழி
ஒல்லையில் வெகுண்டுறு பரசு ராமனேர்
வில்லையும் வளைத்தன னயோத்தி மேயினன். (16)

வாம மார்ந்த மலக்குழற் சீதையைக்
காம மோடு கலந்துறை காவலன்
பூமி யாளப் புனைவன் முடியெனத்
தாம வேற்கைத் தயரத னெண்ணினன் (17)

தேனி ரையக்குழற் சீதை மணாளன்வெங்
கானி னேகக் கதிர்முடி மாற்றுவான்
கூனி யாம்பெயர் கொண்டவ ளெஞ்சினை
வான நாடர் மயக்கினர் வல்லையே. (18)

மன்ன னெண்ணிய செய்கை மனத்திடை
உன்னி யுன்னி யுருகிய கூனவள்
கன்னி மாடங் கலந்துகை கேசிதாள்
சென்னி தாழ்த்தி வணங்கினள் செப்புவாள். (19)

வாட்ட மின்றியுன் மன்னை யிராகவன்
காட்டி னேகவுங் காதல னுக்கிவண்
சூட்ட வும்முடி சொல்லிய முன்வரம்
கேட்டி யென்று கிளந்தன ளாங்கரோ. (20)

சேகய னுருச் செய்தவக் கூனிசொல்
கேகயன் மகள் கேட்டனள் வல்லையே
ஏசய னெழி லெய்தப்பொற் றேரொடு
மாகய னெனு மன்னனை யெய்தினள். (21)

உரத்தி னலொளி சேரர சுள்ளம்போழ்
அரத்தி னேரு மவளென் புதல்வனை
இருத்தி நாயக னுகவீ ராமனை
வரத்தி னல்வனத் தேகவ மூங்கென்றுள். (22)

முந்தை நல்கும் வரத்தின் முறைமையால்
சிந்தை நொந்துமெய் தீர்வதற் கஞ்சியே
அந்த மன்ன னதற்கியைந் தானவன்
மைந்த னும்வனத் தேக வழிக்கொண்டான். (23)

அள்ளி யள்ளியூட் டையசெம் பஞ்சையும்
முள்ள தென்று முனிதருந் தாளினுள்
தெள் ளமுதிற் சிறந்தசொற் சீதையும்
வள்ளல் பின்றொடர்ந் தேகினன் மன்னனே. (24)

உன்னி யவ்விறை யும்முயிர் நீத்தனன்
மன்னி வைகி வயங்குவ தெங்ஙனம்
என்னு முள்ளத் திலக்குவ னும்மவன்
பின் னெழுந்து பெயர்ந்தன னென்பவே. (25)

கான வண்ண மரவுரி கைக்கொடங்
கான வண்ண மெடுத்தவி ராமனும்
ஞான வண்ணனு நங்கையுந் தம்பியும்
போன வண்ணம் புகல்பவர் யாவரே. (26)

எட்டெ னுந்திசை மாந்தரவ் வேழையும்
கட்ட மைந்த சிலையுங் கணையுறை
புட்டி லுங்கொ டிருவரும் போகுழிப்
பட்ட துன்பம் பகரவல் லாரெவர். (27)

அகம கிழ்ந்தெதிர் வந்தடி போற்றிய
குகனொ டும்முவந் துற்றவட் கோதிலாக்
ககன நின்றிழி கங்கை கடந்திட
முகம லர்ந்தொரு மூவரு மேகினர். (28)

வரத்தின் மிக்குண் மகிழ்ந்தெதிர் கொண்டநற்
பரத்து வாசன் பதந்தொழு தன்னவன்
இருத்தி யென்ன விராமனங் கோர்பகல்
அருத்தி கூர்ந்தட குண்டமர்ந் தானரோ. (29)

ஆங்கு நின்றமுந் தைய னணிதிகழ்
வாங்கு நுண்ணிடை மங்கையுந் தம்பியும்
பாங்கர் மேவப் படர்ந்து குறுகினன்
தீங்கு நீங்கிய சித்திர கூடமே. (30)

அவ் வழிச்சில நாளமர்ந் தன்னையர்
பவ்வ மொத்த பதாகினி யோடுசேர்
கவ்வை யுற்ற பரதனைக் கண்டுமன்
எவ்வ மற்றவின் னெய்தலுங் கேட்டனன். (31)

கேட்டு நெஞ்சு கலுழ்ந்து இளர்ந்தவக்
காட்டிற் றுறைத கடன்கழித் தோதினன்
வாட்ட முற்ற பரதற்கு வல்லையந்
நாட்டி லேகென ராகவ னல்வரம். (32)

அழுது சோரும் பரதனை யங்கையால்
தழுவி நல்லன சாற்றியி ராகவன்
பழுதி லாத்தன பாதுகை நல்கினன்
தொழுது மீண்டவன் சுற்றமொ டேகினன். (33)

எண்ணு முள்ள மியைந்தனன் மீள்கலா
அண்ணல் பாலுற்ற வன்னையர் தம்மொடும்
பண்ண மைந்த படையொடு மீண்டனன்
நண்ணி வைகின னந்திக் கிராமமே. (34)

சித்திர கூடமுற் றுறைந்த சேவகன்
தத்தரி நெடுங்கணுன் சனகி தன்னொடும்
எத்திசை யும்புக ழிளைய கோவொடும்
அத்திரி யுறையுளை யணுகி னனரோ. (35)

எண்டிசை புகழவங் கெழுந்து ராகவன்
தண்டலை வனந்தனைச் சார்ந்து சென்னெறி
விண்டலத் துறவரு விராதற் கொன்றனன்
அண்டரு மலர்மழை சொரிந்தங் கார்த்தனர். (36)

ஏற்றவவ் வனத்தினின் றெழுந்து மாதவன்
சாற்றுவண் புகழ்ச்சர பங்கன் மெய்யொரீஇ
மாற்றரு முத்தியின் மருவ வின்னருள்
நாற்றிசை புகழ்பவ னல்கிப் போயினன். (37)

கருதுபல் காவதங் கடந்து போயெதிர்
வருமறை வாணர்தாள் வணங்கி மூவரும்
பருவமாங் குறைதரு பத்தும் மேவினர்
அருளுடை முனிவரர்க் கபய நல்கியே. (38)

பகைத்திற முனிவரர் பகர்ந்த தன்மையால்
நிகழ்த்திய வவ்விட னீங்கி யெய்தினர்
சகத்தினை யொருங்கிலை நிறுத்துந் தண்டமிழ்
அகத்திய முனியுறை யகத்தை யுன்னியே. (39)

நதிகளும் வனங்களு நடந்து நீங்கினர்
அதிசய மிகவுள வகத்தியற் றெழாத்
துதியுறு மவன்வழி சொல்லி வில்லொடு
குதையுறு கணைதரக் கொண்டு போயினர். (40)

விழைவுறீஇ முனிவரன் விளம்பு மவ்வழித்
தழைசிறை யுடையுநற் சடாயு வென்றுசொல்
கழுகெதிர் வேந்தனைக் கலந்து கவ்வைநீர்
ஒழுகுகோ தாவிரி யுவந்து நோக்கினர். (41)

அன்னநதி துன்னின ரகன்கரை யடைந்த
பன்னுமொரு பஞ்சவடி கண்டுபகர் சாலை
இன்னெழி லிலங்கைவினை யோனினி திழைத்த
மன்னுமனை மூவரு மகிழ்ந்துறையு நாளில். (42)

சென்னியொரு பத்துடைய தீயன்மகிழ் தங்கை
துன்னிவரு கின்றவொரு சூர்ப்பநகை யென்பாள்
கன்னன்மொழி யாள்சனகி காதலனை நோக்கா
நன்னல வுருக்கொடவ னண்ணின ளயந்தாள். (43)

அடைந்தவ ளிராகவ ளகத்துழி யமர்ந்த
மடந்தை யரசைத் தனியள் வவ்வுவ னெனச்சேர்
இடந்தனி லிருந்தவிளை யோனினி தறிந்து
கடந்தநெறி வஞ்சமக ளென்றுகதிர் வாளால். (44)

மூக்கினெடு காதினை முலைக்கணை யரிந்தான்
தேக்கனுறை தேவர்நனி திட்கலுற வன்னாள்
கூக்குரலி னேடுகுறு கிக்கொடுமை விள்ள
மாக்கரிய ராக்கதர் வளைத்தமர் விளைத்தார். (45)

விளைத்தகர னாதியர் விளிந்திட வெகுண்டு
வளைத்தசிலை ராகவனும் வாளிபல தொட்டான்
திளைத்தகொடு வெம்பகைக டீர்ந்ததென வானோர்
கிளைத்ததரு நாண்மலர்கள் கிட்டினர் சொரிந்தார். (46)

மூக்க றுக்குறை முடிப்பநீ ரிலங்கைமுன் னவனை
நோக்கி யுற்றவா றனைத்தையு நுவன்றன ளாக
ஆக்க மோடுறை யிராவண னடல்செய்மா ரீசற்
போக்க வன்னவன் பொன்னுழை யுருக்கொடு புக்கான்.

பொய்செய் கின்றமான் போந்ததைச் சானகி புகழா
ஐசெய் கின்றதென் றுசையுற் றறைந்தன ளாக
மெய்செய் கின்றவவ் விராகவன் வில்லொடு தொடர்ந்து
வைசெய் கின்றவம் பேயினன் வஞ்சமென் றறிந்தே. 48

வழங்கு மம்பினுன் மாய்ந்துவீழ் காலமா ரீசன்
விழைந்த சீதையை யிலக்குவன் றனைவிளித் திறந்தான்
மொழிந்த வாறுகேட் டிராகவன் மொழியென நம்மோய்
அழிந்த நெஞ்சின ளிலக்குவ போயறி கென்றாள். (49)

சீதை சொல்லிய வாறுகேட் டிளையவன் றீச்சொல்
சூது செய்தபொய் யரக்கன்சொ லெனநனி சொல்லும்
போதி யென்னலு மறுத்தியோ வென்றவள் புலம்பிக்
கோது செய்தவெவ் வுரைபல கூறினள் குழைந்தாள். 50

பரிந்து பற்பல வெகுண்டவள் பகர்தலி னிளையோன்
விரைந்து நாடுவான் போயபின் மெலிவொடு தனித்தங்
கிருந்த வன்னையை யிராவணன் வவ்விவிண் ணெழுந்தான்
கரந்து கொல்வதற் குற்றது காலமென் றுணரான். (51)

சனகன் மங்கையை யெடுத்தக றசமுகற் றகைந்து
முனிவு கொண்டெதிர்த் தமர்முறை முறைசெயுஞ் சடாய
நனி வருந்திட விருசிறை துணித்தன னடந்து
புனை யிலங்கைபோய்ச் சீதையைச் சிறைபுகுத் தனனால்.

மாய மானுரு வரக்கனை மாய்த்தவன் மீண்டு
சீய மாமென வரும்வழி தம்பிசென் றெய்த
மேய வாறெவன் சீதையை விட்டென விளம்பித்
தூய சாலைசென் றெய்தின னவனொடுந் துணைவின். (53)

சாலை யெய்தினன் சானகி யெய்துதல் காணுன்
மாலை யெய்திய வனைசூழ லெங்கன மதித்துச்
சோலை யெய்திய சுற்றிலுங் கண்டிலன் றுயராம்
வேலை யெய்தினன் பாலெனும் வேலைமேய் மேலோன். 54

மனைவி மேற்செலுங் காதலை மாற்றவல் லுநர்கள்
வினவி னீங்கிலை யென்பதை விளம்புவான் போலச்
சனகி யெவ்விடத் தாளெனச் சார்ந்தவை நோக்கி
அநக னங்கறை கின்றன வறிதுநர் யாரே. (55)

வாம வெஞ்சிலை யிருவரு மவணின் றுவருங்கால்
காம ரஞ்சிறை யிழந்தவச் சடாயுவைக் கண்டார்
தீமை யிவ்வழி நடந்தன தெரித்தவ னிறப்ப
ஈம நல்வினை யியற்றின னிராகவ னிரங்கி. (56)

ஆங்கு நின்றெழுந் தகல்வழிப் புனற்ககன் றல்லில்
தீங்கு செய்தவவ் வயோமுகி மூக்கினைச் சிதைத்து
வாங்கு வெஞ்சிலை யிளையவன் றுணித்தபின் மருவார்ந்
தோங்கி வான்மருடுங் கவந்தன் வாழ் வனத்தையுற் றனரால். 57

நிவந்த வவ்வன விலங்கெலாம் வயிற்றிடு நெடுங்கைக்
கவந்தன் மெய்யில்வெங் கணைவிடச் சாபத்திற் கலந்த
பவந் தனையொழிந் தியக்கனு மாங்கவன் பரவி
உவந்து மற்றுநீர் சவரிபாற் போமினென் றுரைத்தான்.
(58)

உரைத்த வாறிரு வோருமச் சவரிபா லுற்றார்
அருத்தி கூர்ந்தவ ளடைந்தனன் மூலமங் களித்து
மருத் தழைந்திடு மதங்கவெற் பெய்தி நீர்மருவும்
விரித்த செங்கதிர் மதலையை யென்றுவீ டுற்றாள். (59)

சொன்ன வாறிரு வோர்களுந் துணைவினி லேகிப்
பன்னு பம்பையா றடைந்தநு மானெனும் பயிலா
அன்ன வெற்புறை கதிரவன் மதலையை யணுகி
இன்ன நீர்தர வவனெடுந் தோழமை யியைந்தார். (60)

அந்த வெங்கதிர் மதலைவெவ் வாலிபோ ரழிக்கும்
மைந்து நாட்டுதற் கியைந்தன னுகமற் றவன்றாள்
துந்துமிப்புர வென்பெறிந் திடச்சுடர் மலர்க்கை
உந்து மம்பெழுந் தெழுமரா மரமுரு வியதால் (61)

ஆற்றல் கண்டருங் கதிரவன் சேயக மகிழ்ந்து
தோற்ற காலையில் வாலியைக் கொல்லெனச் சொல்லி
ஏற்று வாலியோ டிருஞ்சமம் விளைந்துநின் றிழைத்தான்
மாற் றருங்கணை மறைந்திருந் தெய்தனன் வரதன். (62

விடுத்த வெங்கணை வாலியை விண்ணகத் தேற்ற
அடுத்த செங்கதிர் மைந்தனுக் கரசிய லளித்து
மடுத்த தீம்புனன் மழைபொழி பருவமவ் வளவும்
உடுத்த கானகத் தோங்குவெற் பிருவரு முறைந்தார். 63

மழைபொழிந்திடும் பருவமாங் ககன்றும்வந் தெய்தாத்
தழை செழுங்கதிர் மதலையைக் கொணர்கெனச் சாற்ற
எழில்செய் முன்னவன் றம்பிகிட் கிந்தையுற் றிசைப்ப
மொழியு மன்னவன் முடுகிரா கவன்முன மடைந்தான்.

அடைந்த சூரியன் காதல னரிவையை நாட
மிடைந்த வானரத் தலைவரைத் திசைதொறும் விடுத்துத்
திடங்கொள் சாம்பவ னீலனங் கதனொடு சிறந்த
இடங்கொ டென்றிசைக் கேகென வநுமனுக் கிசைத்து

அண்ண லாழியொன் றணங்குகைக் கொடுக்கென வளித்தான்
நண்ணு நால்வருந் தென்றிசை முழுவது நாடிப்
பெண்ணி னல்லவ ளுறைதரும் பிலம்புகுந் தவளால்
விண்ணெழுந்தசீர் மகேந்திர வெற்படைந் தனரால்.66

அடைந்த வானரத் தலைவர்க ளணங்கையெவ் விடத்தும்
நடந்து தேடியுங் கண்டில மன்றியு நவைதீர்
தடங் கொளுஞ்சிறை சடாயுவைப் போர்ச்சமர்க் களத்தே
மடிந்தி லோமென வழங்கியங் கிருந்தனர் மாதோ. (67)

வழங்கு மவ்வுரை கேட்டொரு மருங்குசம் பாதி
கழிந்த வாறெவன் றம்பிநீர் கழறுதி ரென்ன
அழிந்த சிந்தையர் நடந்தவா றனைத்தையு மடைவே
மொழிந்து சீதையை நாடுவான் வந்தது மொழிந்தார்.

இலங்கை மன்னவ னணங்கொடு மேகுத லெளியேன்
நலங்கொள் காதலன் கண்டுழ னண்ணினன் றட்பக்
கலங்கி யன்னவ னருளெனக் கான்முளை விடுப்பச்
சலங்கொள் வாரியிற் றயங்குத னகர்வயிற் சார்ந்தான்.

விரைந்து சீரிலங் காபுரி மேவினுண் மெலிந்தாங்
கிருந்த சீதையைக் காண்குவீ ரென்றுசம் பாதி
கரிந்த தன்சிறை யிராகவன் றூதரைக் காணின்
பொருந்து மென்பதோர் வரத்தினிற் பொருந்திடப் போனன்

பெரிய வண்சிறை பெற்றவ னிராமனைத் துதித்த
எரிவை வேந்துரை கேட்டக மகிழ்ச்சியோ டிருந்தார்
கரிய வாரிதி கடப்பவர் யாரெனக் கருத
அரிய வாரிதி கடப்பனென் றெழுந்தன னநுமான் (71)

காற்றின் மாமகன் கடலினை யிடரறக் கடந்து
நாற் றிசைக்கணு மிலங்கையிற் புகுந்தன னுடி
ஆற்றல் சேர்பகை யற்றிட வசோகமா வனத்தில்
கோற் றொடிக்கையா ளுறைவது கண்டுளங் குளிர்ந்தான்

சூழி ராக்கதர் மடந்தையர் துயில்புரி யிரவின்
வீழி வாயெழிற் சீதைமுன் மேவிய வநுமான்
ஆழி பார்சொலக் கற்பினுக் கரசிகைக் கொடுத்து
வாழி ராகவன் செய்திற முரைத்தனன் மாதோ. (73)

மருக் கமழ்ந்தபொற் றருக்களை வளைத்தன னொடித்து
வெருக்கொள் கிங்கரர் விளிந்திட வடித்தனன் விரைந்து
முருக்கு மென்றழைத் திராவணன் முறைமுறை விடுத்த
அரக்கர் யாரையுஞ் செகுத்தன னூர்த்தன னநுமான்.74

அன்ன சாலையி லிந்திர ஜித்தெழுந் தநுமான்
தன்னை யுற்றயன் வாளியின் வீக்கிநற் றூதை
முன்ன ருய்த்தலு மரக்கனீ யாரென மொழிவோன்
உன்னைக் கொல்லுமவ் விராகவன் றூதனென் றுரைத்தான்

தரங்க வேலையைக் கடந்தவன் சாற்றுதல் கேளாக்
குரங்கை நீரிவண் விரைந்துகொல் லுதிரெனக் கொடியோன்
மருங்கு சேர்தரு வீடணன் றூதரை வருத்தி
இரங்க மாய்ப்பதிங் கறங்கொலோ வெனவிலக் கினனால்

கொடிய ராவணன் றுகினனி சுற்றியிக் குரங்கின்
நெடிய வாலினி னிறுவுமின் றழலைநீ ரென்ன
அடி வணங்கின ரத்திறம் புரிந்தனல் கொளுவ
முடிய வங்நகர் சுட்டனன் மாருதி முழுதும். (77)

சனகி வைகிட னன்றிமற் றெங்கணுந் தழல்வைத்
தநுமன் வந்தடி வணங்கியச் சீதைபா லணியாய்
வனையு நல்லசூ டாமணி வாங்கியவ் வேலை
துணை விற் றுவினன் றேன்றினன் மகேந்திரச் சுரும்பின்.

அங்க தன்முத லாங்கடைந் தோருக்கவ் வணங்கை
நங்க ளையகன் றேவியைக் கண்டவா நவின்று
தங்க வேறெனு வவரொடுந் துணையின்வந் திறைஞ்சிச்
செங்க ணனுக்குஞ் சீதையைக் கண்டமை தெரித்தான்

மண்டு நீர்க்கடல் கடந்தன னடந்தமை வழங்கிப்
பண்டை நான்மறைக் கரியவன் பதுமமென் கரத்தின்
தொண்டை வாய்மயி லளித்தசூ டாமணி வளிப்ப
அண்டர் நாயக னம்மணி கண்மணிக் களித்தான். (80)

தே னிரைத்ததார்ச் செழுங்கதிர் மகன்முனஞ் செல்ல
நீ னிறக்கடல் கடந்தவ னீலனே முதலாம்
வா னரப்படை வளைதர விளையவன் மருவக்
கா னகத்தினைக் கடந்தனன் கடல்வண னெழுந்தே. 81

விரியு மூவுல கத்துமன் னுயிர்க்கணே விளங்கிப்
பெருகு மாறுவந் தநட்புன னிச்சலும் பெய்யும்
கரிய மாமுகிற் கொழுந்தெழு கடற்படை யோடு
திரைசெய் வாரிதிப் புறத்தினிற் சென்றிறுத் ததுவே.82

மாற்கட னிகர்த்தவா னரநற் சேனையின்
நூற்கடல் கடந்தபே ரறிவின் வைகுறும்
நாற்கட னிலம்புகழ் நம்பி வைகினன்
பாற்கடல் வைகிய பான்மை யென்னவே. (83)

வலங்கொ டிண்சிலை வள்ளல் கடற்கரை
நலங்கொள் சேனையி னண்ணின னென்றலும்
புலங்கொள் புந்தியிற் புன்மையர் தம்மொடும்
இலங்கை மன்னவ னெண்ண லுற்றனரோ. (84)

எண்ணுங் காலையங் கெய்திய வீடணன்
அண்ண றேவிய ருஞ்சிறை நீக்கென
நண்ணு பற்பல நல்லறங் கூறலும்
கண்ணிற் றீயெழ நீகடி தேகென்றான். (85)

முனிவு கொண்டுதன் முன்னவ னீக்கலும்
வினை கடந்தநல் வீடணன் வல்லைபோய்த்
தனிமுத றிருத் தாண்மிசை வீழ்ந்தனன்
அநக லும்மநு மான்முக நோக்கினன். (86)

நல்லனென் றனுமான் சொல நாயகன்
அல்ல லிங்கொழி யென்றப யங்கொடுத்
தெல் லிலங்கைக் கிறையவ னாகெனச்
சொல் லிலங்கு சுடர்முடி சூட்டினன். (87)

கருணை கொண்டவக் கண்ணன் கருதலும்
வருணன் வந்தில னென்று மலர்விழி
அருணம் வந்தவ னம்பரத் தேவினான்
தருண வெய்யவன் போன்ற தழற்கணை. (88)

அன்ன காலை யறிந்து வருணன்வந்
தின்ன றீர்க்கு மிராமனை யெய்தியுன்
மன்னு சீர்சொலி வாழ்வுற யாருமென்
சென்னி மேலணை செய்யெனச் செப்பினான். (89)

அளவி கந்த வரிக்குலத் தோரெழில்
வளர நின்ற வரைக்குழு வுய்த்திட
உளமு வந்துநா ரேசனை யாமணை
நளன் விரைந்தவ ணன்கமைத் தானரோ. (90)

அணை கடந்தருஞ் சேனையொ டாங்குயர்
துணை கடந்த சுவேலவெற் பெய்தினான்
இணை கடந்த விலங்கெழிற் சீதையாம்
கணை கடந்தகண் ணாட்புணர் காதலன். (91)

கோது மேவு மிலங்கையர் கொற்றவன்
தூத ராஞ்சுக சாரண ராங்குற
ஏத நீங்கவின் றெங்கணு நாடிப்போய்
ஓது நீரென் றிராம னுணர்த்தினான். (92)

நாடிய தூதர்போய் நவின்ற வாறுகேட்
டேடலா லங்கலா னிலங்கை காவலன்
நீடிய கோபுர நின்று நோக்கினான்
ஆடவர் திலகனு மாங்க நோக்கவே. (93)

ஆரிய னெடுமலை யடைந்து நோக்கிய
சூரியன் காதலன் றனைவிற் றாவிப்போய்ப்
பாரினி லிலங்கையான் பசும்பொன் மாமுடி
சீரற வீழ்த்தினன் றிருமி யெய்தினான். (94)

பங்கயச் செங்கணான் பணித்த வேவலால்
அங்கதன் றூதுபோ யறைந் திராவணன்
வெங்கதங் கொளவவன் மீண்ட காலையின்
பொங்கரிச் சேனைபோய்ப் புரிசை சூழ்ந்ததே. (95)

எயிலை முற்றி யெதிர்த்த வரக்கரை
அயி லெயிற்ற வரிக்குலத் தோர்தெறப்
புயலை யொத்தவன் பொன்முடி பத்தும்வெவ்
வெயிலை யொத்தொளிர் வேந்தொடு மேற்றனன். 96

காரை யொத்த கரியவன் றம்பையந்
தாரை யொத்த தசமுக னோடுஞ்செய்
போரை மற்றெவர் சொல்வரப் புன்மையோன்
பாரை யுற்றனன் றேர்படை யற்றரோ. (97)

தஞ்ச மற்ற தயமுகன் றன்னைநீ
செஞ் சரத்தொடுந் தீர்ந்தனை யாவையும்
துஞ்ச மற்றினித் தன்னுதி நாளையென்
றஞ்ச னபபுய லன்னவன் கூறினன். (98)

ஏண் சுமந்த விராம னிதுசொல
நாண் சுமந்து நடந்த விராவணன்
கோண் சுமந்த கும்பக ணன்றனைப்
பூண் சுமந்த புயவலி காட்டென்றான். (99)

கும்ப கன்னன் குறுகிக் கொடுஞ்சமர்
உம்பரும் வெருக் கொள்ள வுஞற்றினன்
நம்பி வெங்கணை நாடியங் கேவலால்
அம்ப ரத்தி லவன்றலை யாழ்ந்ததே. (100)

மடிதல் கேட்டுள மாழ்த்தித் தயமுகன்
புடையின் மேய புதல்வ னெனப் புகல்
அடல்செய் வேலதி காயனை யேவினன்
படையி னோடும் படர்ந்தமர் செய்யவே. (101)

தமர மாக்கடற் றனையோ டெய்திவந்
தமர்செய் வானதி காயனை யாயிதழ்க்
கமல மேயவெண் கண்ணன் படைவிடுத்
திமைசெய் போழ்தி னிலக்குவன் வீட்டினன்.(102)

ஈட்டு தானையோ டெழுந்ததி காயனங் கிறத்தல்
நாட்ட நீருகக் கேட்டவ னண்ணலர் வெருவக்
கோட்டு வார்சிலை யிந்திர சித்துவைக் குறுகி
வீட்டி வாபகை வேந்தரை யென்றனன் விடுத்தான்.
(103)

அன்ன விந்திர சித்தெழுந் தந்தரத் தொளித்தே
இன்னல் செய்வ ரக்கணை யேவின னிளையோன்
தன்னெ டுந்தனித் தாரகப் பொருளவற் பிணிப்பப்
பன்னு புள்ளர சந்தற விரிந்ததப் படையே. (104)

கோளை நீங்குவெண் குளிர்மதி யெனச்சிலை யொடுகூர்
வாளை நீங்கிடாத் தம்பியோ டெழுந்தமா யனைத்தன்
தோளை நீங்கிய தோன்றலைத் துதித்தனன் றெழுதான்
தாளை நீங்குறு தன்புசெய் தடஞ்சிறைக் கருளன் (105)

புள்ளின் வேந்துபோ யகன்றபின் புகல்கவிக் குலத்தோர்
தெள்ளு தெண்டிரைப் பரவையிற் சிலைத்தனர் சிற
எள்ள ருந்திற லிராவணன் கேட்டவ ணேவும்
தள்ள ருந்தருக் கரக்கர்கள் சாய்ந்தனர் சமரில் (106)

கோட்டு மால்கரி வாம்பரிக் கொடிஞ்சியந் தடந்தேர்
ஈட்ட மோடெழுந் தெண்ணில ரிருபுடை நெருங்க
மீட்டு மிந்திர சித்தரிக் குலத்தினர் வெருவப்
பூட்டு வார்சிலை யோடுவெம் பொருகளம் புகுந்தான். 107

ஆர்த்தி ராவணி யயன்படை விடுப்பவப் படையால்
தார்த் தடம்புய வீடணன் சாம்பவன் றழுங்கக்
கார்த் தடங்கடல் கடந்தவ னன்றியக் களமாம்
பார்த் தலத்தினி லடைந்தவர் வீழ்ந்தனர் பதைத்தூர்.

உருத்தி ராவணி யொல்லையில் விடுத்தவப் படையால்
தரைத் தலத்திடை வீழ்ந்தவர் யாவருந் தனிப்போய்
மருந்து மாமலை மாருதி வல்லையிற் கொணர
அருந்தி கூர்துயி லுணர்ந்தவ ராமென வெழுந்தார் 109

அன்ன காலைவெம் மாயைசெய் தகன்றிரா வணிபோய்
இன்னல் செய்யுமோர் வேள்வியை நிகும்பலை யிடத்துத்
துன்னி யாற்றுத லறிந்தழித் தரிக்குலத் தோடு
மன்னு நீள்சிலை யிலக்குவன் வளைத்தமர் விளைத்தான்.

தேரி னேறியங் கெதிர்தரு மிந்திர சித்தும்
ஏறி னேறிய மாருதி திறற்புயத் தேறிப்
போரி னேறிய விலக்குவ னும்பொரு திறத்தைப்
பாரின் யார்சொல்வார் பங்கயத் தயனுக்கு மரிதால்.

இந்து வின்கணை யிலக்குவன் வில்வளைத் தேவ
வந் தெரிந்தவவ் விந்திர சித்தவண் மாய்ந்தான்
சுந் தரங்கிக முரசுபெற் றனமெனச் சுரர்கள்
அந் தரத்தினின் றலர்மழை தூர்த்தன ரார்த்தார். (112)

மைந்த னிந்திர சித்தவண் மாய்ந்தது கேட்டுச்
சிந்தை நொந்திரா வணனிரு பான்விழி வழிநீர்
உந்து துன்பமெவ் வலையெறி நீர்க்கட லுற்றுன்
நிந்தை வந்தவன் பின்னரு மமர்செய நினைந்தான். (113

மிடல்கொண் மூலமா பலமெனும் வீரரை விடுத்தான்
கடிகை யேழினி லிராகவ னவருயிர் கவர்ந்தான்
கொடிய ராவணன் றேரிவர்ந் தயிற்படை கொண்டு
படைகள் சூழ்வரப் படுகளத் தெதிர்ந்தனன் படர்ந்தே

மருவி யிந்திர னேவலின் மாதலி கொணர்ந்த
பெரிய பொற்றடந் தேரிவர்ந் தம்பினைப் பெய்யும்
கரு முகிற்கொழுந் தன்னவன் கார்முகங் கோட்டி
ஒரு மடந்தையை யொளித்தகல் கள்வனென் றுடன்றுன்

இராம ராவண வுயுத்தமா மெனவிமை யவரும்
தரா தலத்துறுஞ் சமர்க்கெலா முவமையாச் சாற்ற
முராரி யாமுத றசமுக னுடுமவண் முயன்ற
புரா தனச்சமர்க் குவமைவே றெடுத்தவர் புகல்வார். 116

திசை முகன்படை யெடுத்திரா கவன்சினந் தேவித்
தச முகன்றனை மாய்த்தனன் மாய்த்தலுந் தயங்கும்
குச முகங்களிற் குங்குமங் கோட்டரம் பையரோ
டிசை முகம்மலர்ந் திணர்மழை பொழிந்தன ரிமையோர்

தள்ளருந் துயர்கூ ரரக்கியர் யாருந்
தலைவிரித் தனரழு தேங்க
வெள்ளியம் பொருப்பங் கெடுத்தவன் முதலா
வெஞ்சம ரழுவத்தின் மாய்ந்த
அள்ளிலை நெடுவே லரக்கருக் கெல்லா
மருந்திறல் வீடண னென்பான்
எள்ளரும் புகழ்சே ரிராமனின் னருளா
லியற்றுநீர்க் கடன்கழித் தனனால். (118)

இலங்கைகாத் தளிப்ப வீடணற் காயு
ளியம்புமோர் நற்பத மளித்து
நலங்கிளர் கற்பி னரசியென் றெவரு
நவிற்று நங்கையர்க் கரசியையவ்

விலங்கிவில் லுமிழும் புட்பக விமான
மீதுவைத் திளையவ னேடும்
உலம்பொரு புயவா னரருட னிருப்ப
வுறைந்திரா கவனெழுந் தனனுல். (119)
அங்குநின் றகன் றுகிட் கிந்தை யென்னு
மணிகிளர் நகரிடை யடைந்து
செங்கதி ரவன்சேய் முதலிய கவிகள்
சேர்தரு மனைவியர் யாரும்
பொங்கெழிற் சீதை மருங்குசூழ்ந் திருப்பப்
புனிதனப் புறத்தெழுந் தேகித்
தங்கிய தவத்தோர் சோலைக ளனைத்துந்
தையலுக் கறைந் துபோ யினனுல். (120)
அருந்தவம் புரியும் பரத்துவா சப்பே
ரந்தணன் விருந்தினி தளிப்ப
மருந்தினு மினிய வுண்டியை யருந்தி
யாவருங் குகனெடும் வருங்கால்
பொருந்திய வரவு மாருதி முன்போய்ப்
புகன்றிட நந்தியம் பதியின்
இருந்தவேற் பரத னெழிற்படை சூழ (121)
வெதிர்கொள்வான் றுயரோ டெழுந்தான்.
எழுந்தவேற் பரத னிளையவ னேடுஞ்
சென்றடித் தாமரை யிணைமேல்
விழுந்தன னிறைஞ்ச விமானநின் றிழிந்து
விருப்பொடு மிளைஞரைத் தழுவித்
தழும்புற விறல்வி றரித்ததோட் டம்பி
தன்னெடு தாயரை வணங்கி
மொழிந்தநான் மறைதேர் வசிட்டனைத் தொழுதான்
முந்தைநான் மறையினேர் வரியான். (122)
தாரையே முதலா மங்கையர் சூழச்
சானகி தானுமங் கிழிந்து
காரைநேர் குழலார் மாமியர் மலர்த்தாள்
காதலின் வணங்கினன் வள்ளல்
வீரமே வியதன் றம்பியர் முதலாம்
விருப்பொடங் கடைந்தவ ரோடும்
ஏரினல் விளங்கும் புட்பகத் தேறி
யெய்தின னந்தியம் பதியே. (123)

நந்தியம் பதியி னிளைஞர்தம் மோடு
நலஞ்செய்வா னரர்கடம் மோடும்
அந்தமிழ் புகழ்சால் வீடணன் குகன்மற்
றடைந்தவர் தம்மொடு மமர்ந்து
சந்தமுந் துகிலு மாலையும் பூணுந்
தரித்தனன் புட்பகந் தனைநீ
மந்திரி பாற்போ கெனவவன் விடுத்தான்
மறைக்கெலாம் வரம்பென லாவான். (124)

கனைகடற் றானை புடைவளைந் தேகக்
கார்முழக் கெனவியந் துவைப்பத்
தினகரன் சிறுவன் வீடண னேடு
தெண்ணிலாக் கவரிசா லசைப்பப்
பனிமதிக் கவிகை மாருதி நிழற்றப்
பரதன்முன் றேர்விட வியந்து
புனைதரு மயோத்தி யெனுநகர்க் கெழுந்தான்
புலவருக் காயிவட் புகுந்தான் (125)

புரந்தரன் புரம்போற் புனைந்தார் நகர்
வரந்தரு நெடி யோன்வர யாவரும்
விரைந் தெழுந்தெதிர் கண்டனர் விண்மழை
பரிந்து கண்ட பயிர்க்குழுப் பண்பினே. (126)

அஞ்ச னத்தணி யம்பணை சூழ்தரும்
அஞ்ச னத்தணி சேரு மயோத்தியாள்
அஞ்ச னத்தருங் கண்மணி யாமென
அஞ்ச னத்தெழி லண்ணலங் கெய்தினன். (127)

எற்று தெண்டிரை யேழ்கடற் றானைசூழ்
ஒற்றை வெண்குடை யோனும்வந் தெய்தலும்
அற்ற மற்ற சராசரம் யாவுமாங்
குற்ற வின்ப முரைக்கடங் காதரோ. (128)

நீடுந் தோயங்கொள் வானினை நீள்வரை
நாடுந் தோகைக ளென்னவந் நாதனை
ஆடுந் தோரண வீதிக ளார்ந்துயர்
மாடந் தோறு மடந்தையர் நோக்கினர். (129)

நோக்கிய நோக்கொடு நுவன்ற மங்கையர்
நீக்கருங் காதல்செய் மனமு நீண்டதார்
தூக்கிய வீதியிற் றொடர்ந்து பின்செல
மாக்கரு முகிலனன் வாயி லெய்தினன். (130)

பூமகன் மகனெடும் புகழ்செ யன்னவன்
ஏழுறு மிளையவர்மற் றேனை யோரொடும்
தேமல ரணிகுழற் சீதை யென்றுசொல்
கோமக டன்னெடுங் கோயில் புக்கனன். (131)

மடவர றன்னெடும் வயங்கி ராமற்குக்
கடனகி முதலிய கவின்செய் நீரினல்
நடைபெறு வசிட்டமா முனிநன் காட்டினன்
சுடர்விரி மணிமுடி சூட்டி னனரோ (132)

தாயரு மிளைஞருஞ் சனகன் பாவையும்
மேயபூ வுலகரும் விண்ணு ளோர்களும்
ஏயபேர் மகிழ்ச்சியோ டிருப்ப வெங்கணும்
நேயனோர் மதிக்குடை நிழற்றி னனரோ. (133)

உரைதரு தீயன வொழிந்து பாறின
மருவுநல் லறமெலாம் வளர்ந்து மாமழை
இருவளஞ் சுரந்தன வேக தாரனும்
கரியவன் கடற்புவி காவல் செய்யவே. (134)

கரங்களிற் கணைபொழி கரிய மாமுகில்
தரங்கநற் கடற்புவி சார்ந்து காக்குநாள்
புரங்களு நதிகளும் புள்ளு மாக்களும்
மரங்களு மலைகளு மகிழ்ச்சி கூர்ந்தவே. (135)

மிகும்பொருட் குவையெலாம் விருப்பின் வேதியர்
புகந்தனர் முகந்துதாம் போக நல்கிமுச்
சகம்புகழ் வசிட்ட னுற் றயங்கி ராகவன்
மகம்பல புரிந்தனன் மகிழ்ந்து வைகினன். (136)

சினத்தொடு மரக்கரைச் செகுத்த செஞ்சிலைக்
கனத்தினிற் றிகழ்பவன் கதைகள் கேட்குநர்
நினைக்குநர் வைகுவோர் நிகழ்த்தும் வண்மையோர்
மனத்தினில் விழைந்தன மருவி வாழ்பவே. (137)

சுபம்.



ஸ்ரீ கிருஷ்ண விலாஸ் பிரஸ், இராமநாதபுரம்,